# 13

# கணவன், மகள், மகன்.

-அசோகமித்திரன்

தெரு முனையில் சண்முகத்தைப் பார்த்தபோதே அவன் ஏதோ தகவலோடு வந்திருக்கிறான் என்று மங்களத்துக்குத் தெரிந்துவிட்டது. ''ராமு சாருக்கு இன்னிக்கு வீட்டுக்கு வர நேரமாகுமாம். சொல்லிட்டு வரச் சொன்னாரு.'' என்று சண்முகம் சொன்னான்.

''ஏன், ஆபீஸிலேயே நேரமாகுமா?''

''ஆபீஸிலியா? அஞ்சு மணிக்கு இழுத்துப் பூட்டிடுவாங்களே? வேறெங்கேயோ வெளியே போறாரு போலிருக்குது.''

மங்களம் சுவர்க் கடியாரத்தைப் பார்த்தாள். மணி நான்கரை.

''நீ மறுபடியும் ஆபீஸ்தானே போறே?

''ஆமாம்''

''அப்போ ராமுவை இன்னிக்கு நேரே வீட்டுக்கு வந்துடச் சொல்லிடு. எங்கேயாவது போறதுன்னா சனி ஞாயிறு போயிக்கலாம்?''

''நான் போறதுக்குள்ளே அவர் கிளம்பிடுவார்.''

''இருந்தாச் சொல்லேன்.''

''இருந்தாச் சொல்லிடறேன்.''

சண்முகம் போய்விட்டான். சென்ற வாரம் ஒருமுறை இரவு பதினொன்றாகியும் ராமு வீடு திரும்பாதது கண்டு மங்களம் அவன் போயிருக்கக்கூடும் என்று அவளுக்குத் தெரிந்த இடங்களுக்குத் தனியாகப் போனாள். இரு இடங்களில் விளக்கு அணைக்கப்பட்டு எல்லாரும் தூங்கப் போய் விட்டார்கள். மூன்றாவது இடம் சீட்டுக் கச்சேரி நடக்கும் மனமகிழ் மன்றம். அங்கு கூட மேஜை நாற்காலிகளை ஒழுங்காக இழுத்துப் போட்டுக் கதவைத் தாளிட இருந்தார்கள். ராமு அன்று எட்டு எட்டரை மணிக்கே கிளம்பிப் போய்விட்டதாக மன்றத்தின் பணியாளர்களில் ஒருவன் சொன்னான். அந்த நள்ளிரவில் திறந்து வைத்திருந்த வெற்றிலைப் பாக்குக் கடைகள், நடைபாதை முட்டை இட்லி வண்டிகள் அருகில் எங்காவது ராமு நின்று கொண்டிருக்கிறானா என்று பார்த்தபடி மங்களம் நடந்து வந்தாள். இல்லை. வீடு வந்த பிறகுதான் அந்த மாதிரி சென்றது சரியில்லையோ

என்று சந்தேகம் தோன்றியது. பயம் கூடத் தோன்றியது. அவளுடைய உடலில் பொட்டுத் தங்கம் கூட இருக்காது. ஆனால் இருட்டில் தாக்க வருபவனுக்கு அது தாக்கிய பிறகு தானே தெரியவரும்; அது தெரிந்த பிறகு ஆத்திரம் அதிகமாகும்.

அன்று இரவு முழுவதும் ராமு வரவில்லை. மங்களம் அவளையு மறியாமல் விடியற்காலையில் கண்ணயர்ந்து விட்டாள். பாக்கெட் பால் கொண்டு வந்து தரும் ஆயா கதவைத் தட்டிக் களைத்துப்போய்ப் பாலை வாசலிலேயே வைத்து விட்டுப் போய் விட்டாள். அது ஒரு முனையில் ஒழுகித் தரையில் பால் சிறு குட்டையாகத் தேங்கியிருந்தது.

எல்லா வீடுகளிலும் குழந்தைகள் பள்ளி செல்லத் தயாராகி, பெரியவர்கள் அலுவலகங்களுக்குக் கிளம்பும் நேரத்தில் ராமு வீட்டுக்கு வந்தான். ''ஏண்டா ராத்திரியெல்லாம் வரவில்லையே?'' என்று கூட மங்களம் கேட்கவில்லை. அவன் படுக்கையை விரித்துப் போட்டுப் படுத்துக் கொண்டான்.

ஒரு காலத்தில் அந்த வீட்டில் எல்லாமே உரிய நேரங்களில் உரிய முறையில் நடந்தன. ராமுவின் அப்பாவை இன்றும் வெளியார் பலர் தங்கமான மனிதன் என்றுதான் நினைவுபடுத்திக் கொள்வார்கள். முதற்பெண் லலிதாவின் கல்யாணத்தைத்தான் எவ்வளவு அமரிக்கையாக நடத்தினார்! ஐந்தாம் பந்தியில் உட்கார்ந்த சத்திரத்துக் காவற்காரனுக்குக் கூட எல்லாரையும் போல ஒரே மாதிரியான கவனிப்பு. கல்யாணத்திற்கு வந்திருந்த இரண்டு உறவினர்களின் குடைகள் தொலைந்து போன போது கூட அவர்கள் திரும்ப ஊருக்குக் கிளம்பும்போது புதுக்குடைகள் வாங்கிக் கொடுக்கப்பட்டன. ராமுக்கு மைத்துனர் மோதிரம் என்று சம்பந்திக்காரர்கள் போட்டார்கள். அதை அப்பா கழட்டி வாங்கிக் கொண்டார். ராமுக்குப் பதினைந்து வயது. தங்க நகைளின் சாத்தியங்களை அவனுக்குத் தெரிவித்திருக்க நியாயமில்லை.

இன்னும் பல விஷயங்கள் பலர் தெரிந்துவைத்திருக்கவில்லை. மங்களமும் ஒவ்வொரு நகையாகக் கழட்டி கொடுத்துக் கொண்டிக்க வேண்டியதாயிற்று. இரண்டாவது பெண் உமாவுக்கு வரன் பார்த்து நிச்சயதார்தம் செய்வதற்கு முதல் நாள் ராமுவின் அப்பா யார் யாரையோ ஐயாயிரம் ரூபா கேட்டு அலைந்திருக்கிறார், யாரோ கொடுத்ததாகக் கூடக் கேள்வி. ஆனால் மறுநாள் காலையிலிருந்து அவர் காணவில்லை. மாலை பிள்ளை வீட்டார் வந்துவிட்டார்கள், இவரைக் காணோம். முதலில் உறவினர், நண்பர் வீடு, ஆபீஸ் என்பது போய்ப் போலீஸ் ஸ்டேஷன், ஆஸ்பத்திரி என்று தேடிப் போனார்கள். அவர் காணாமலே போய் விட்டார்.

ஆனால் வேறு ஏதேதோ தகவல்கள் கிடைத்தன. அதே ஊரில் அவர் இன்னொரு பெண்மணியுடன் குடித்தனம் நடத்தி அவளுக்குக் கல்யாணத்திற்குப் பெண் இருந்தது. நிறையப் பேரிடமிருந்து கடன்

வாங்கியிருந்தார். தொகைகள் அல்ல, ஆயிரம், இரண்டாயிரம், ஐயாயிரம்..... இவ்வளவு பணத்தையும் என்ன செய்தார்? இரண்டாம் மனைவிக்கும் பெரிதாகச் செய்துவிடவில்லை. பார்க்கப் போனால் அவளிடமிருந்து கூட நகைகளை வாங்கிப் போய் விற்றிருக்கிறார்.

மங்களத்திற்கு ஒவ்வொரு கட்டத்திலும் புதிராக இருந்தது. அவள் இவ்வளவு நாட்கள் எந்த மனிதனோடு வாழ்க்கை நடத்தினாள்? இருபத்தைந்து ஆண்டுகள் கூடவே இருந்தும் கூட அவளறியாத ரகசியங்கள் இவ்வளவு அவனிடமிருந்ததா? அவன் மறைத்தானா அல்லது அவள் தான் ஒரேயடியாகக் கண்ணை மூடிக் கொண்டு இருந்து விட்டாளா? இவ்வளவு குருடாக இருந்தவளால் கணவன் மீது பிடிப்பு வைத்திருக்க முடியுமா? அதனால் தான் அவன் ஓடிவிட்டானா?

மங்களத்துக்கு அவளுடைய மண வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் எப்போதோ புதைந்து போன அதல பாதாளத்திலிருந்து மேலெழும்பி வந்தது. அவன் அவளிடமும் கொஞ்சியிருக்கிறான், கோபித்திருக்கிறான், யோசனை கேட்டிருக்கிறான், அவள் விருப்பப்படி ஏராளமான சந்தர்ப்பங்களில் நடந்திருக்கிறான், குழந்தைகளைத் தூக்கி விளையாடி யிருக்கிறான், இரவு கண்விழித்திருந்து மருந்து கொடுத்திருக்கிறான், உமாவை ஆஸ்பத்திரியில் சேர்க்க வேண்டியிருந்த போது ஆஸ்பத்திரி வெராண்டாவில் இரவெல்லாம் காத்துக் கிடந்திருக்கிறான். பீர்க்கங்காய் துவையல் இருநாட்களுக்கு ஒரு முறை செய்யச் சொல்லியிருக்கிறான், சட்டைக்குப் பொத்தான் தைக்கச் சொல்லியிருக்கிறான். வீட்டு வாசலில் புள்ளியிட்ட கோலம் வேண்டாம் என்று கூறியிருக்கிறான், தூக்கத்தில் ஏதேதோ உளறியிருக்கிறான், உடல் நோய்ப்பட்டுப் படுத்திருக்கிறான், அவனுடைய அம்மா இறந்தபோது அழுதிருக்கிறான், வீட்டில் ஒட்டடை அடித்திருக்கிறான், ஆனால் அவளறியாமல் அவன் தனியாக இன்னொரு பெண்ணோடு வாழ்க்கை நடத்தி இப்போது வளர்ந்த மகள் ஒருத்தி வேறு இருக்கிறாள். அங்கும் அந்தப் பெண்மணியுடனும் கொஞ்சியிருப்பான். கோபித்திருப்பான், ஆலோசனை கேட்டிருப்பான், குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு விளையாடியிருப்பான். அந்த வீட்டிலும் ஒட்டடை அடித்திருப்பான்....அவனுக்கு எப்படி இவ்வளவுக்கும் நேரம் இருந்தது? உடலில் சக்தி இருந்தது? எல்லாவற்றுக்கும் மேலாக இவ்வளவு ஆழமான மனிதனா? அவ்வளவு அசாத்தியமான மனிதனா? இப்போது எங்கிருப்பான்? எப்படி இருப்பான்? அவனை இன்னொரு முறை பார்க்கக் கிடைக்குமா?

உமாவின் கல்யாணம் நின்றுவிட்டது. ராமுவின் படிப்பு நின்று விட்டது. அந்த நாளில் அஞ்சல் வழிக் கல்வி மாலைக் கல்லூரி என்றெல்லாம் கிடையாது. ஒவ்வொரு பாடமாகவும் தேர்வு பெற முடியாது. பகுதி ஒன்று, இரண்டு மூன்று என்று இருக்கும். ஒவ்வொரு பகுதியையும் மொத்தமாகத் தேர்வு பெற வேண்டும். ஆதலால் கல்லூரி போக முடியாமல் படிப்பு

நின்றதால் அதோடு படிப்பே போச்சு. ராமு வேலைக்குப் போக ஆரம்பித்தான்.

ராமு வேலைக்குப் போய் அந்தச் சம்பளத்தை எதிர் பார்த்துத்தான் குடும்பம் நடக்க வேண்டியிருந்தது. ராமுவின் அப்பா இன்னும் உயிரோடிருக்கிறார் என்றுதான் அவருடைய அலுவலகத்தில் கருத வேண்டியிருந்தது. ஆதலால் அவர் ஒப்புதல் கையெழுத்து இல்லாமல் எந்தப் பணமும் மங்களத்துக்குத் தர முடியாது போயிற்று. வருடங்கள் பல முடிந்து அவர் ஓய்வு பெற வேண்டிய நாள் வந்தபோது கூட அதிகாரப் பூர்வமாக அவர் உயிரோடு இல்லை என்ற அத்தாட்சியில்லாமல் அலுவலகத்தில் சேர்ந்திருந்த பணத்தை யாருக்கும் தர முடியவில்லை. உமாவும் ஒரு சீட்டுக் கம்பெனியில் ரசீது எழுதும் வேலைக்குப் போனாள்.அவள் வேலைக்குச் சேர்ந்து இரு மாதங்களுக்குள் அவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது என்று வேறு யாரோதான் மங்களத்துக்குச் சொன்னார்கள். மங்களத்துக்கு நம்பமுடியவில்லை. அவள் பெண் அன்று காலைகூட ஏதும் புதிதாக நடந்திராத மாதிரிச் சாப்பிட்டுக் கைக்குச் சிறிது மோர்சாதமும் எடுத்துப் போயிருக்கிறாள்! உமா மாலையில் வீடு வந்தவுடன் அவளைக் கேட்க வேண்டும் என்றுதான் நினைத்திருந்தாள். ஆனால் கேட்க வாய் வரவில்லை. அடுத்த நாளும் வாய் வரவில்லை. அதற்கடுத்த நாளும்.

பதினைந்து நாட்கள் கழித்து உமாவாகவே தனிக்குடித்தனம் போகப் போவதாகச் சொன்னபோதும் கேட்க முடியவில்லை. அவளுடைய மாப்பிள்ளை இளவயதுக்காரனா, வயதானவனா, சைவமா, அசைவமா என்று கூடக் கேட்கவில்லை. உமாவாகவும் அம்மாவுக்குத் தெரிவிக்க வேண்டும் என்று நினைத்ததாகத் தோன்றவில்லை. வீட்டிலிருந்த பாத்திரங்களிலேயே சிலவற்றை அவள் எடுத்துப் போனாள். அவள் கல்யாணத்தை நினைத்து வாங்கி வைத்திருந்த வெள்ளிப்பாத்திரங்களில் நான்கைந்து இருந்தன. அவள் அம்மாவை மேற்கொண்டு சீர், வரிசை என்று கேட்கவில்லை. அவளுடைய கணவன், அவள் கல்யாணம் செய்து கொண்டது எதைப் பற்றியும் தனியாகச் சொல்லவும் இல்லை.

லலிதாவிடம்தான் ஒரு முறை மங்களம் இதைச் சொல்லி வருத்தப்பட்டுக் கொண்டாள். இந்தப் பெண்ணுக்கு என்ன நெஞ்சழுத்தம்! நான் வேற்று மனுஷியா? சத்ருவா? என்னிடம் ஒரு வார்த்தை சொல்லலியே? போயிட்டு வரேன்னு சொன்னா, ஆனா எங்கே போறேன்னு சொல்லலியே.

லலிதா வெகு நாட்களுக்குப் பிறகு அங்கு வந்திருந்தாள். முதல் பிரசவம் தாய் வீடு என்றாலும் அதன் பிறகு வரவே இல்லை. இப்போது இரண்டாவது குழந்தைக்கு மூன்றாவது பிறந்த நாள்.

''என்னிடம்தான் ஒரு மூச்சு விடலைன்னாலும் உங்கிட்டேயாவது சொல்லியிருக்கலாமே?'' என்று மங்களம் சொன்னாள், விம்மி விம்மி அழுதாள்.

லலிதா பேசாம சிறது நேரம் இருந்தாள். பிறகு எழுந்து நின்றாள். ''உமா எங்கிட்டே சொல்லிட்டுத்தான் கல்யாணம் பண்ணிண்டா?'' என்றாள்.

''என்னது?''

''அவ கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போறது, வேறே வீடு போகப் போறது எல்லாத்தையும் தான் முன்னாலேயே சொல்லியிருக்கா.''

''என்ன?''

''எனக்கும் சொன்னா, ராமு கிட்டேயும் சொன்னா.''

''உங்க இரண்டு பேருக்கும் எல்லாம் தெரிஞ்சுமா ஒருத்தர்கூட எங்கிட்டே ஒண்ணுமே சொல்லலே?''

லலிதா உதட்டைப் பிதுக்கினாள். போய் விட்டாள்.

மங்களம் அவள் போன திசையைப் பார்த்தபடி வெகு நேரம் உட்கார்ந்திருந்தாள்.

*

இப்போது ராமுவுக்கு உடம்பு கெட்டு விட்டது. அவனுடைய ஈரல் முதலிலிருந்தே வலுவானது கிடையாது. உண்ட உணவு ஜீரணமாகாமல் அவன் தவிப்பது குழந்தையாயிருக்கும் நாட்களிலிருந்தே உண்டு. இப்போது அது இன்னும் பழுதடைந்துவிட்டது. அவன் வயிறு வீங்கி ஒரு மாதம் ஆஸ்பத்திரியில் கிடந்த போது மங்களம் பல நாட்கள் சாப்பிடவேயில்லை. ஆனால் அவளால் விழித்திருக்க முடிந்தது. வேளா வேளைக்கு ராமுவுக்காகப் பத்தியமாக ஆகாரம் சமைத்துக் கொண்டு போக முடிந்தது. அவனுடைய உடல் நிலை பற்றி விசாரிக்க வெவ்வேறு வைத்தியர்களுக்காகக் காத்திருக்க முடிந்தது. பெரிய வைத்தியர்கள் எவரும் நேரடியாக மங்களத்திடம் பேசவில்லை. அவர்கள் வேறு சிறிய வைத்தியர்களிடம் சொல்லுவார்கள். அதைச் சுருக்கி அல்லது மாற்றி அந்தச் சிறிய வைத்தியர்கள் மங்களத்திடம் சொல்லுவார்கள். ஆனால் ஒரு பெரிய வைத்தியர் அன்று மங்களத்திடமே நேரிடையாகத் தமிழிலேயே பேசினார். ''உங்க பிள்ளை கண்டதைக் குடிச்சுட்டு மறுபடியும் சீக்கிலே விழுந்தா எழுந்திருக்கமாட்டாரு''

ராமு அந்த முறை எழுந்து விட்டான். ஆனால் இதோ மறுபடியும் சீக்காளியாவதற்கான பாதையில் இருக்கிறான். அவனை இன்னமும், ''குடிக்காதேடா'' என்று ஒரு வார்த்தை அவளால் சொல்ல முடியவில்லை. அவன் குடிப்பது அவளுக்குத் தெரியும் என்ற நிலையை உண்டாக்க மனம்

வேண்டவில்லை. அவளுக்குத் தன் மகனறிய அவனைக் குடிகாரன் என்று அவள் நினைப்பது கூடச் சாத்தியமாயில்லை. அவனும் அவள் அறியாதவள் என்றுதான் நினைக்க விரும்புவான். இவ்வளவு முற்றிப் போயும் தெரியாமல் இருக்குமா என்று தோன்றாது. அவளுக்குத் தெரியாதது போல அவள் நடந்து கொள்ள வேண்டும்; அவளுக்குத் தெரியாது, அவளுக்குத் தெரிவதை அவன் விரும்பவில்லை என்பது போல அவன் நடந்து கொள்ள வேண்டும்.

வெயில் நன்கு புறப்பட்ட அந்த வேளையில் நினைவிழந்து படுத்துக் கிடக்கும் மகனை மங்களம் பார்த்தபடி நின்றாள். அவனுடைய அப்பா வேறு எப்படி எல்லாம் இருந்தாலும் அவர் குடித்துவிட்டு வீட்டுக்கு வந்ததில்லை. அவருடைய அம்மாவிடம் அவர் எப்படி நடந்து கொண்டார் என்று அவளுக்குத் தெரியாது. ஆனால் ராமு பல விஷயங்களில் அவனுடைய அப்பா போலவே நடந்து கொள்கிறான். அவளிடம் எரிந்து விழவில்லை. சத்தம் போட்டதில்லை. ஆனால் பல விஷயங்களில் அழுத்தமாக வாயே திறவாமல் இருந்து விடுகிறான். உமாவைப் பற்றி ஒரு வார்த்தை சொல்லவில்லை. உமாவுக்கு அவள் எதிரியல்லவே? அவள் மகளின் நலனில் அவளுக்கு அக்கறை இருக்கத்தானே செய்யும்? அது அவனுக்கும் அவளுக்கும் தோன்றவில்லையே?

ராமு குடித்தால் இனிமேல் உயிருக்கு ஜவாப்தாரியல்ல என்று வைத்தியர் திட்டவட்டமாகக் கூறிய பிறகு கூட அவன் குடிக்கப் போய்விடுகிறான். அதற்கென்று எங்கோ ஏற்பாடு செய்து வைத்திருக்க வேண்டும். கையில் காசு கிடையாது. வீட்டில் தரித்திரம் பிடுங்கித் தின்றகிறது. ஆனால் இரவெல்லாம் வீடு திரும்பாமல் குடிப்பதற்குப் பணம் கிடைத்து விடுகிறது. அதற்கென்று ஓரிடம் கிடைத்து விடுகிறது. அவள் மட்டும் அவனுக்கென்று எடுத்து வைத்திருந்த சோற்றைக் கண்களில் ரத்தம் சிந்தக் குப்பையில் கொட்ட வேண்டும்.

''ராமு! ராமு! ஏண்டா நீயும் என்னை வதைக்கிறே? குடிக்காதேடா! நம்ம வம்சத்திலே யாருமே குடிச்சுச் செத்துப்போனது கிடையாதுடா! குடிக்காதேடா! குடிக்காதயேண்டா!'' என்று கத்தவேண்டும் என்று மங்களத்துக்கு இருந்தது. ஆனால் ஆயுட்காலப் பழக்கதோஷம் ஒரு சொல் உச்சரிக்க முடியவில்லை. மகனை ஏறிட்டுப் பார்க்க முடியாது இருந்து அவன் தூங்கும்போது தான் நேராக, முழுதாகப் பார்க்க முடிகிறது.

புருஷனிடம்தான் இப்படி இருந்தாயிற்று, மகனிடமுமா என்று அவளுக்குத் துக்கம் பொங்கிக் கொண்டு வந்தது. அழத்தான் முடியவில்லை.

---